# பகவத் பாதை

# BAGAVATH PATHAI

தமிழ் மாத இதழ்

மலர் 5 | இதழ் 2 | ஏப்ரல் 10, 2018 | வருடச்சந்தா ரூ 100/- Volume : 5 | Issue 2 | April 10th, 2018 | Annual Subscription Rs. 100/-



| மனோலய நாசம்

# பகவத் பாதை

தமிழ் மாத இதழ்





மனோ லயம் மட்டுமே இருக்கிறது. அதுதான் தோன்றுகிறது. பிறகு அதுதான் மறைகிறது. தோன்றுவதை மனோலயம் என்றும், மறைவதை மனோலய நாசம் என்றும் கூறுகிறோம். மனோலயம் என்பது செயற்கையான நிலை. மனோலய நாசம் என்பது இயற்கையான நிலை. மனோலயத்தின் மூலமே நாம் எதையும் புரிந்துகொள்ள முடியும். ஞானம் என்பதும் மனோலயமே. மனோலய நாசத்தைதான் விடுதலை-முக்தி என்று கூறுகிறோம். முக்திதான் உயர்வான இலக்கு. ஞானம் என்பது அதற்கான வழிமுறைதான்.

– ஸ்ரீ பகவத்

## உள்ளே



கூடுதல் தகவல்களைப் பெற விரும்புகிறீர்களா? அல்லது பாதையை நண்பர்களுக்கு அனுப்ப விரும்புகிறீர்களா?





31, Ramalingasamy Street, Ammapet, Salem - 636 003. Tamilnadu India

V.A.P. SHARAVANAN - 99942 05880
Dr. N. KAILASAM - 94432 90559
K.S. JEEVAMANI - 97891 65555

www. sribagavathmission.org
www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com



This book Designed by

SRI ESPARI GRAPHICS, Salem-3
Cell : 90926 46260, 98651 34075


ஸ்ரீ பகவத் மிஷன் குடும்ப உறுப்பினராகிய தங்களுக்கு வணக்கம்.

நமது ஸ்ரீபகவத் ஐயா அவர்களின் ஒருநாள் சிறப்பு ஞான முகாம் ஆயிரத்து ஐநூறு அன்பர்கள் கலந்து கொள்ள கூடிய சென்னை தேனாம்பேட்டையில் அமைந்துள்ள காமராஜர் அரங்கில் செப்டம்பர் 2ம் தேதி ஞாயிற்றுக்கிழமை நடைபெற உள்ளது. இது நாம் அனைவரும் அறிந்ததே. இந்த ஞான முகாமை சிறப்பாக நடத்துவது பற்றிய ஒரு கலந்தாய்வு கூட்டம் சென்னையில் மார்ச் 11ம் தேதி ஞாயிற்றுக்கிழமை நடைபெற்றது, இதில் 50 ஆர்வலர்கள் கலந்து கொண்டனர். இந்த நிகழ்ச்சிக்காக நாம் பல செலவுகளை எதிர்கொள்ள வேண்டியுள்ளது. இருப்பினும் இவ்வுண்மை அனைவரையும் சென்றடைய வேண்டும் என்ற நோக்கில் சலுகை கட்டணமாக ஒரு நபருக்கு ரூ 250/- என நிர்ணயித்துள்ளோம். ரூ. 250/- வழங்க முடியாத கலந்து கொள்ள ஆர்வமுள்ள அன்பர்களுக்கு அதனினும் குறைந்த, முடிந்த கட்டணத்தை பெற்றுக் கொண்டு அவர்களும் கலந்து கொள்ள செய்யலாம் எனவும் முடிவு செய்துள்ளோம். இந்நிகழ்ச்சிக்காக நாம் எதிர்கொள்ளும் செலவுகளை பயனடைந்த அன்பர்களின் பங்களிப்பை கொண்டு நிறைவு செய்யலாம் எனவும் முடிவு செய்துள்ளோம். **பல காலமாக அடைவதற்கு அரிதானதாக இருந்த மெய் ஞானத்தை ஸ்ரீபகவத் ஐயா அவர்கள் புரிதலாக எளிமையாக்கி நம் அனைவருக்கும் வழங்கிவிட்டார்கள்.**

இவ்வுண்மையை அனைவருக்கும் எடுத்துச் செல்ல வேண்டியது பயனடைந்த நம் அனைவரின் தலையாய கடமையாக கருத வேண்டுகிறோம்.

மனத்துயரமே புறத்தில் நம்மை முடக்கி துன்பத்தில் ஆழ்த்துகிறது. **மனித குலத்தின் மனத்துயரத்தை போக்க இது நாம் எடுத்திருக்கும் முதல் மாபெரும் முயற்சி ஆகும்.** இம்மாபெரும் முயற்சிக்கு அனைவரும் துணை நிற்க வேண்டுகிறோம். செலவுகளை எதிர்கொள்ள தங்களது பங்களிப்பை வழங்கிய அன்பு உள்ளங்கள்.

திரு. **TMK. தியாகராஜன்**, சென்னை - ரூ. 10,000/-

திரு. **சம்பந்தம் ஐயா - வடிவம்மாள் தம்பதியினர்,** அனைவரின் உணவுக்காக ஆகும் செலவுகள்

திரு. **சபாபதி,** சென்னை - ரூ. 5000/-

திரு. **ராம்லால்,** சென்னை - ரூ. 20,000/-

திரு. **சிவகுரு - உமா சிவகுரு** தம்பதியினர், சென்னை - ரூ. 6000/-

திருமதி **பொற்செல்வி,** சென்னை - ரூ. 2000/-

திரு. **S. கணேஷ்,** சென்னை - ரூ. 25000/-

இவர்கள் அனைவருக்கும் உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

வாய்ப்புள்ள அன்பர்கள் தங்களது பங்களிப்பை வழங்குமாறு அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

மேலும் ஸ்ரீபகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்களாகிய நாம் அனைவரும் கலந்து கொள்வதோடு புதிய அன்பர்கள் அனைவரையும் கலந்து கொள்ள செய்து வேண்டுகிறோம். இதற்காக முன் பதிவு தாளை (Ticket) ஸ்ரீபகவத் மிஷனோடு தொடர்புகொண்டு பெற்றுக் கொள்ளலாம். இத்தொண்டில் தங்களை இணைத்துக் கொள்ள ஆர்வமுள்ள அன்பர்கள் 50 Tickets கொண்ட புக்கை பெற்று மற்றவர்களுக்கும் வினியோகிக்கலாம். அனைவரது ஒத்துழைப்பையும் வழங்க வேண்டுகிறோம்.

**ஸ்ரீ பகவத் மிஷன், 9994205880, 97891 65555**

Writing On Water

# மனோலய நாசம்



- ஸ்ரீ பகவத்

நாம் ஓர் ஆபத்தில் சிக்கி விடுகிறோம்.

இப்போது நம் மனதில் என்ன வகையான உணர்ச்சிகள் ஏற்படும்?

நம் மனதில் மகிழ்ச்சியும் அமைதியும் மட்டுமே ஏற்பட்டால் நாம் அந்த ஆபத்திலிருந்து தப்பி ஓடி நம்மைக் காத்துக் கொள்ள முடியாது.

ஆகவே பயமும், பதட்டமும் ஏற்பட்டு நம்முடைய மனதே நம்மை அந்த ஆபத்திலிருந்து தப்பி ஓட வைத்து விடுகிறது,

இவ்வாறு நமது செயல்களை ஊக்குவிக்கும் உணர்ச்சிகளைத் தூண்டுவது எது?

இதனை உளவியலாளர் "சிம்பதட்டிக் நெர்வஸ் சிஸ்டம்" Symphothetic Nervous System,,, SNS என்று கூறுகிறார்கள்.

இந்த SNS உருவாக்கிய உணர்ச்சிகள் தொடர்ந்து அப்படியே நம்மிடம் தங்கி விட்டால் என்ன ஆகும்?

நமக்கு உடல் மற்றும் மனரீதியான பிரச்சினைகளை ஏற்படுத்திவிடும்.

அப்படியானால் நமக்கு ஏற்பட்ட உணர்ச்சிகள் என்ன ஆக வேண்டும்?

நமக்கு உதவி செய்ய வந்த உணர்ச்சிகள் அப்படியே இருந்து விடாமல் அவை சமன்பட்டு போய் விடும்.

இப்படி சீறிக்கொண்டு வந்த உணர்ச்சிகள் எவ்வாறு சமன்படுகின்றன?

SNS உருவாக்கிய உணர்ச்சிகளைச் சமன்படுத்தும் அமைப்பு ஒன்றும் நமக்குள் செயல்பட்டு வருகின்றது. அதுதான் "பேரா சிம்பதட்டிக் நெர்வஸ் சிஸ்டம்" Para Symphothetic Nervous System... PSNS என்று அழைக்கப்படுகிறது.

நமது பிரச்சினைகளைத் தீர்க்க SNS உணர்ச்சிகளை உருவாக்குகின்றது. அப்படி SNS உருவாக்கிய உணர்ச்சிகளை PSNS சமன்படுத்துகின்றது.

- மேலே கண்ட மனோவியல் சம்பந்தப்பட்ட செய்திகளை, நானாக எந்த நூலிலும் படித்துத் தெரிந்து கொண்டிருக்கவில்லை.

அன்பர் ஒருவர் இந்த விபரங்களைத் தெரிவித்து அதில் சில சந்தேகங்களைக் கேட்டார்.

"SNS ஆனது தனது பங்குக்கு பயம், டென்சன் போன்றவற்றை உருவாக்கி விடுகின்றது. ஆனால் PSNS முறையாகச் செயல்படாமல் இருந்து விடுவதால் SNS மட்டுமே மீண்டும் மீண்டும் செயல்பட்டு நமது பயம் மற்றும் டென்சன் போன்ற தேவையற்ற உணர்ச்சிகள் நீடித்து விடுகின்றன...

"SNS ம் PSNS ம் மாறி மாறி செயல்பட்டால்தான் நமது மன இயக்கம் சீரானதாக இருக்கும். SNS மட்டுமே தேவைக்கதிகமாகச் செயல்படுவதால் நம் மனதினுடைய ஆரோக்கியமான செயல்பாடுகள் குறைந்து விடுகின்றன. SNS இப்படித் தேவைக்கு அதிகமாக செயல்படாமல் இருக்கவும், PSNS தனது கடமையை ஒழுங்காக ஆற்றவும் நாம் என்ன செய்ய வேண்டும்?...

"இது மனோரீதியான பிரச்சினையா? அல்லது உடல்ரீதியான பிரச்சினையா? இது நமது உடலில் பலவிதமான கெமிக்கல்களைச் சுரந்து விடுவதால் அதனை உடலிலிருந்து அப்புறப்படுத்த ஆசனங்கள், உடற்பயிற்சிகள், சுவாசப் பயிற்சிகள், நகைச்சுவை மன்றங்கள் ஆகியவற்றில் பங்கேற்குமாறு வலியுறுத்துகிறார்கள். இப்படித்தான் நாம் SNS பிடியிலிருந்தும் அதன் பாதிப்புகளிலிருந்தும் வெளிவர வேண்டுமா?"

-இப்படி அவர் கேள்விகளை எழுப்பினார்.

அவரது கேள்வி நம்மை மனோ லயம் என்றால் என்ன மனோ லய நாசம் என்றால் என்ன என்பதை மீண்டும் ஆய்வுக்கு எடுத்துக் கொள்ள வைத்தது.

மனோ லயம் என்றால் என்ன?

நம்முடைய நாக்கிற்கு ஓர் உணருந்தன்மை உண்டு. அந்த உணருந்தன்மை இருக்கிறது. ஆனால் இருப்பது தெரியாமல் இருந்து கொண்டிருக்கிறது.

ஓர் இனிப்பான பழத்தை நாம் சுவைக்கும் போது நம் நாக்கினுடைய உணருந்தன்மை இனிப்பாக மாறி தன்னைக் காட்டிக் கொள்கிறது.

இப்படி நம் மனதும் ஓர் இருப்புத் தன்மையுடன் - அறியும் தன்மையுடன் இருக்கிறது. இருப்பது தெரியாமல் இருந்து கொண்டிருக்கிறது.

அது ஏதாவது ஒரு பொருளை அறியும் போது அந்தப் பொருளாகவே வடிவெடுத்து மாறி தன்னைக் காட்டிக்கொள்கிறது.

நாம் எந்தப் பொருளை அறிவதனாலும் நம் மனது அந்தப் பொருளாகவே மாறி விடுகிறது.

நாம் ஒரு பாம்பைப் பார்ப்போமாயின், நம் மனமே பாம்பாக மாறித்தான் அது பாம்பென்றே புரிந்து கொள்கிறது. பிறகு அதனால் ஏற்படும் பயமாகவும் அதுவே மாறிக்கொள்கிறது.

மனோ லயத்தின் மூலமே பாம்பையும் புரிந்து கொள்கிறோம். மனோ லயத்தின் மூலமே பயமாகவும் இருந்து கொள்கிறோம்.

அனைத்தும் மனோலயத்தின் உதவியுடனேயே நடைபெறுகிறது.

இதை அவர்களுடைய பெயரில் குறிப்பிடுவோமானால் SNS ன் காரணமாக இப்படி நடைபெறுவதாக இதனைக் கூறலாம்.

SNS மூலமாக ஏற்பட்டவை அனைத்தும் PSNS மூலமாகத்தான் மறைந்து சமன்பட வேண்டும்?

மனோலயத்தைப் பற்றி விவரிக்கும் ஆன்மிக சாஸ்திரங்கள் யாவும் மனோ லயத்தை விடவும் மனோ நாசத்துக்குத்தான் முக்கியத்துவம் அளிக்கின்றன.

மனோ லயத்தை விட மனோ நாசம் உயர்வானதா?

அப்படி என்ன உயர்வு?

மனோ லயத்தை விடவும் மனோ நாசத்தில் அப்படி என்னதான் ஏற்படும்?

மனோ நாசம் என்பது மனமே இல்லாத ஒரு சூன்ய நிலையல்ல. மனோ லயம் கலைவதையே மனோ நாசம் என்ற பெயரில் விவரிக்கின்றனர்.

அதுதான் அந்த அன்பருடைய வார்த்தைகளின்படி PSNS என்று குறிப்பிடப்படுகிறது.

SNS ஐச் சமன்படுத்தும் வேலையைச் செய்வதுதான் PSNS என்று அவர் கூறுகிறார்.

அது என்ன வேலை?

அது எவ்வாறு சமன்படுத்தப்படுகிறது?

ரோடு ரோலர் இயந்திரம், ரோட்டில் கொட்டப்படும் கற்களையெல்லாம் அழுத்திச் சமன்படுத்துகிறது.

புல்டோசர் போன்ற இயந்திரங்கள் மேடான நிலங்களைச் சரித்து சமன்படுத்துகின்றன.

PSNS ம் இப்படித்தான் சமன் செய்கின்றதா?

நீங்கள் உங்கள் விரலைக் கொண்டு உங்களுடைய பெயரை தண்ணீரின் மேல் எழுதுகின்றீர்கள்.

எழுத்துப் பிழையோடு எழுதி விடுகின்றீர்கள். அதனை எப்படித் திருத்துவது?

தவறான எழுத்தைக் கைகளால் அழித்து விட்டு சரியான எழுத்தை விரலால் மீண்டும் எழுத வேண்டுமா?

தண்ணீர் என்பது திடப்பொருளன்று. அது ஒரு திரவப்பொருள்.

அது எந்த வடிவத்தையும் நிலையாக வைத்துக் கொள்ளாது.

தண்ணீரானது, தன் மீது எழுதப்பட்ட எந்த எழுத்துக்களையும் முயன்று அழித்திடத் தேவையில்லை.

நீர் மேல் எழுதப்பட்ட எழுத்துகள் அனைத்தும் தாமாகவே அழிந்து விடும்.

மணல் மீது நாம் எதையாவது எழுதினோமென்றால், அதனை நாம் நம் கைகளால் சமன்படுத்தி அழித்திட வேண்டியது நேர்ந்திடும்.

அதே முயற்சியை நாம் தண்ணீர் மீது எழுதிய எழுத்துகள் மீதும் காட்டி அழித்தோமென்றால் என்ன ஆகும்?

புதிய எழுத்துகள்-தடம் உருவாகி விடும்.

நம் மனதில் ஏற்படும் உணர்ச்சிகளுடைய நிலையும் இத்தகையதுதாம்.

வெளிப்பட்ட உணர்ச்சிகள் யாவும், வெளிப்பட்ட உடனேயே மறைந்தும் விடுகின்றன.

தண்ணீரின் இயல்பைப் போன்றே நம்முடைய மனதின் இயல்பும் இப்படி அமைந்துள்ளது.

தண்ணீரில் எழுதப்பட்ட எழுத்துகளை - கீறல்களை - சமன்படுத்துவது தண்ணீரின் இயல்பு.

அதுபோல் மனதில் ஏற்பட்ட உணர்ச்சிகளை சமன்படுத்துவதும் மனதின் சுயமான இயல்பாகவே உள்ளது.

நாம் பொதுவாக "எனக்குப் பயம் வருகிறது. எனக்கு வருத்தம் வருகிறது. எனக்குக் கோபம் வருகிறது என்றுதான் கூறுகிறோம். ஏதோ ஒன்று நம்மிடம் நம் மனதில் வந்து சேருவததாகத்தான் கூறுகிறோம்.

பிறகு அப்படி வந்து சேர்ந்தவற்றை அப்புறப்படுத்த வேண்டும் என்று எண்ணுகிறோம். PSNS உதவி செய்ய வேண்டும் என்று எதிர்ப்பார்க்கிறோம்.

சேலம் சரவணன் ஐயா இன்னுமொரு வார்த்தை பிரயோகத்தை அறிமுகம் செய்துள்ளார்..

"கோபமோ, பயமோ, வருத்தமோ நம் மனதுக்கு வரவில்லை - வந்து சேரவில்லை. அவை நம் மனதிலிருந்து புறப்பட்டு வெளியேறிச் செல்கின்றன."

தாமாக வெளியேறி மறைந்து செல்லும் ஒன்றைத் தடிக்கொண்டு அடித்து விரட்ட வேண்டுமா?

உண்மையில் PSNS என்பது நம் மனதின் இயல்பு - இயற்கையான அம்சம்.

- அது இயற்கையாகவே தன்னைத்தானே சமன் செய்து கொள்ளும் அம்சம்.

அங்கு முயற்சி எதுவுமே தேவை இல்லை.

முயற்சி அனைத்துமே SNS ஐச் சார்ந்தது. மனோ லயத்தைச் சார்ந்தது.

PSNS முயற்சி செய்யுமேயானால் அதுவும் SNS ஆகவே மாறி விடும்.

PSNS என்று பெயர் கொடுத்ததால் அப்படியொரு நிலை இருக்கிறது என்று அர்த்தமில்லை.

மனோ நாசம் என்று பெயர் கொடுத்ததால் அப்படியொரு நிலை இருக்கிறது என்று அர்த்தமில்லை.

மனோ லயம் மட்டுமே இருக்கிறது. அதுதான் தோன்றுகிறது. பிறகு மறைகிறது.

தோன்றுவதை மனோலயம் என்றும், மறைவதை மனோநாசம் என்றும் கூறுகிறோம்.

மனோநாசம் என்பதை இந்த விளக்கத்துக்கேற்ப இந்த சூழ்நிலைக்காக மனோலயநாசம் என்று பெயர் கொடுப்பதுதான் பொருத்தமாக அமையும்.

தோன்றுவதையும் இருப்பதையும் ஒரு நிலையென்று கூறலாம். ஆனால் இப்படி மறைந்து செல்வதை ஒரு நிலையென்று கூற முடியுமா?

இருப்பதைக் கொண்டு மனோலயம் தோன்றியதை உணரலாம்.

இருப்பது மறைவதைக் கொண்டு மனோநாசம்-மனோலயநாசம் செயல்பட்டுள்ளதை உணரலாம்.

தோன்றுவதும் மறைவதும் மனோலயத்தை மையமாக வைத்தே நிகழ்ந்திடுகின்றன.

இதை இன்னுமொரு வகையாகக் கூறுவோமேயானால்

தண்ணீரை மையமாக - ஆதாரமாக வைத்தே எழுதப்படும் எழுத்துகள் தோன்றுவதும் அழிவதும் ஏற்படுகின்றன.

அழிவது என்பது சமன்படுவது.

சமன்படுவது என்பது தண்ணீரின் இயல்பான இயற்கையான நிலை.

மனோலயநாசம் என்ற சமன்பட்ட நிலையும் நம் மனதினுடைய இயற்கையான நிலையாகும்.

மனோலயநாசம் என்பது இயற்கையான நிலை. மனோலயம் என்பது செயற்கையான நிலை.

மனோலயத்தில் முயற்சி உள்ளது. மனோலயநாசத்தில் முயற்சி இல்லை.

முயற்சிகள் அனைத்துமே செயற்கையானதே.

செயற்கை சம்பந்தமாக - முயற்சி சம்பந்தமாக நம்முடைய பங்களிப்பு உள்ளது.

ஆனால் இயற்கை சம்பந்தமாக நம்முடைய பங்களிப்பு எதுவும் தேவை இல்லை. அது இயல்பாக - இயற்கையாகவே செயல்பட்டு விடும்.

செயல்கள் அனைத்தும் மனோலயம் சம்பந்தப்பட்டவையாகும்.

SNS ஐச் சமன்படுத்த வேண்டும் என்று எண்ணுவது கூட SNS ன் செயல்பாடே தவிர அது PSNS அல்ல.

"SNS ஐச் சீரமைக்க தேவையில்லை. அவை ஏற்படுத்திய தேவையற்ற உணர்ச்சிகள் தாமாகவே சமன்பட்டு விடும்" என்று புரிந்து கொள்வது,

மனோநாசமா?

அல்லது மனோலயமா?

நமது செயல்கள் அனைத்துமே மனோலயந்தான்.

உண்மையைப் புரிந்து கொள்வது, ஞானமடைவது அனைத்தும் மனோலயமே.

**மனோலயத்தின் மூலமே நாம் எதையும் புரிந்து கொள்ள முடியும். ஞானம் என்பதும் மனோலயமே.**

**ஆகவே மனோலயத்தை இழிவாகக் கருதத் தேவையில்லை.**

**ஆனாலுங்கூட மனோலயத்தை விடவும் மனோநாசத்தையே ஆன்மிக நூலோர் உயர்வாகக் கூறுகின்றனர்.**

**மனோநாசத்தையே விடுதலை அல்லது முக்தியென்று கூறுகிறோம்.**

**ஞானத்திலும் உயர்வானதுதான் முக்தி.**

ஞானத்தின் மூலமும் முக்தி அடையலாம். வேறு வழிகள் மூலமாகக்கூட முக்தி அடையலாம்.

முக்திதான் உயர்வான இலக்கு. ஞானம் என்பது அதற்கான வழிமுறைதான்.

அதற்காக முக்தி என்பது நம்மை விட்டு விலகியிருக்கும் ஏதோ ஒரு அசைவற்ற நிலையென்றும் எண்ணி விடக்கூடாது.

நம் மனதினுடைய இயற்கையான நிலைதான் முக்தி நிலை.

SNS செயல்படும் போது அங்கு செய்பவன் - செயல் என இரண்டு விதமான தன்மை ஏற்பட்டு, மனோநாசம் ஏற்படுவதைத் தாமதப்படுத்தி விடுகிறது.

செய்பவனையும் செயலையும் இணைப்பது மனோலயநாசம்-விடுதலை செயல்படுவதற்கு உதவியாக உள்ளது.

SNS ஐச் சீரமைக்கும் பொறுப்பை SNS எடுத்துக் கொள்ளும் போது அது ஒரு சுயமுரண்பாடாக மாறி விடுகிறது. மனோலயநாசம் தாமதமாகி விடுகிறது.

SNS-மனோலயம் இயற்கையானதுதான் என மனோலயமே எடுத்துக் கொள்ளும் போது

அதனைச் சீரமைக்கும் பொறுப்புள்ள "செய்பவன்" எவரும் உதயமாவதில்லை.

இதனால் செய்பவனும் செயலும் ஒன்றாகி விடுகின்றது.

நாம் விளையாட்டுகளிலோ, பஜனை, நடனம் என ஏதாவது ஒன்றில் ஈடுபடும்போது நான் என்னும் நமது தனித்த உணர்வானது

தன்னைத் தனிமைப்படுத்தாமல்,

தான் பங்கேற்கும் செயலில் இரண்டறக் கலந்து விடுகிறது.

இரட்டைத் தன்மையற்ற மன இயக்கமானது இறுக்கமில்லாமல் இயங்க ஆரம்பிக்கிறது. விடுதலையுடன்-முக்தியுடன்-லயநாசத்துடன் இயங்க ஆரம்பிக்கின்றது.

இதன் மூலம், முக்தி அனுபவம் என்றால் என்ன என்று ஒரு புரிதலுக்கு வந்து விட முடியும்.

இப்படி பஜனை, நடனம் போன்றவற்றால் தூண்டப்படாமல் இயற்கையாகவே நம் மனது முக்தியுடன் மனோலயநாசத்துடன் செயல்பட

ஞானம் மிகவும் அவசியம்.

ஞானத்தினால் ஏற்படும் விடுதலையே உயர்வானதாகும்.



# கேள்வி? பதில்...

ஞானிக்கு கர்ம பந்தம் உண்டா? இல்லையா?



**V.A.P. சரவணன்,** சேலம்.
செல் : 99942 05880

**கேள்வி :** ஞானப்புரிதலை புரிந்து கொண்ட ஒருவருக்கு கர்ம பந்தம் உண்டா? இல்லையா? கடவுள் தன்மையை பற்றி அவர் என்ன புரிதலில் இருப்பார்? எப்போதும் அன்பும், அமைதியாக இருப்பாரா? நடைமுறை வாழ்வில் எப்படி இருப்பார்?

**பதில் :** கர்மா என்பது எல்லோருக்கும் உண்டு. இதில் ஞானிக்கு மட்டும் விதிவிலக்கு அல்ல. ஞானிக்கும் எல்லாவிதமான கர்ம பலன்களும் ஏற்படத்தான் செய்யும். கர்மாவே இல்லை என்றால் இந்த உலகில் யாரும் பிறக்க வேண்டிய அவசியமே இல்லை. இது கர்ம பூமி. இங்கு கர்மாவினால் மட்டும் தான் உலகமே இயங்கி கொண்டு இருக்கிறது. நமது கர்மா என்னவென்று நமக்கு தெரியாது. நமக்கு ஏற்படும் சூழ்நிலையை வைத்தே நமது கர்மாவை உணர முடியும். கர்மாவினால் ஏற்படும் சூழ்நிலை நம் கைவசம் இல்லை. ஆனால் ஏற்பட்ட சூழ்நிலையில் நாம் எப்படி செயல்பட வேண்டும் என்ற சுதந்திரம் நம் கைவசம் மட்டுமே உண்டு. இதனைதான் ஆகாமிய கர்மா என்று கூறுகிறோம். ஒரு மோசமான சூழ்நிலையை ஒரு சாதாரண மனிதன் எதிர்கொள்ளும்போது அச்சூழ்நிலையில் பந்தப்பட்டு சிக்கி உணர்ச்சிவசப்பட்டு தன்னிலை மறந்து செயல்படுவான். புரிந்து கொண்ட ஞானி தான் சந்திக்கும் ஒரு மிக மோசமான சூழ்நிலையில் கூட தன்னையும் அந்த சூழ்நிலையையும் பிரித்து பார்த்து அந்தச் சூழ்நிலைக்கு எதுசரியான செயலோ அதை செய்யும் தகுதியில் இருப்பார். மேலும் முடிந்து போன கர்மாவை பற்றிய நினைவு பதிவிலிருந்து ஒருவர் எப்படி விடுபடுகிறார் என்பதிலும் கூட ஞானிக்கும் சாதாரண மனிதருக்கும் வித்தியாசம் இருக்கிறது.

இப்போது பிரச்சினை கர்மா ஏற்படுவதிலிருந்து விடுதலை அடைவதைப் பற்றி இல்லை. முடிந்து போன கர்மாவின் நினைவு பதிவிலிருந்து ஒருவர் எப்படி விடுபடுகிறார் என்பதைப் பார்ப்போம். பகவத் ஐயாவின் இந்த ஞானப் புரிதலை புரிந்து கொள்ளாதவரை முடிந்து போன கர்மாவின் நினைவுகளிலிருந்து விடுபட தெரியாமல் அந்த கர்மாவை பற்றிய தாமாக ஏற்படும் சிந்தனையை திரும்பத், திரும்ப சிந்தித்தலாக மாற்றி உடலில் தேவையற்ற இரசாயன மாற்றத்தை ஏற்படுத்திவிடுவோம். மனதில் சதா நமக்கு நாமே முரண்பட்டு, குற்ற உணர்ச்சியை ஏற்படுத்திக் கொண்டு தேவையற்ற இரசாயன மாற்றத்தையும் ஏற்படுத்திக் கொண்டு ஏதாவது ஓர் உடல் நோயாக மாற்றி விடுவோம்.

பகவத் ஐயாவின் இந்த புரிதலை புரிந்து கொண்ட பிறகு நமக்கு நாமே முரண்படுவதிலிருந்து விடுபடுகிறோம். சிந்தனைகள், சிந்திப்பாக மாற்றமடையாமல் பிரவகிக்கத் தொடங்குகின்றன. புறக்காரியத்திற்கு தேவையான சிந்தனையை சிந்திப்பாக மாற்றி செயல் புரியும் தன்மைக்கு மாறிவிடுகிறோம். தேவையற்ற சிந்திப்பிலிருந்து விடுபடுகிறோம். மனதில் தோன்றும் அத்தனை எண்ண, உணர்வுகளுமே முடிந்து போன கனவை போன்று வெறும் நிழல் என்ற புரிதல் தன்மைக்கு வந்து விடுகிறோம். அகத்தே பார்த்து உள்ளே நம்மை சரிசெய்து கொண்டு இருந்தது போய் வெளியே இருக்கும் சூழ்நிலைக்கு தேவையான செயலுக்கு அகத்தில் ஏற்படும் சிந்தனையை பயன்படுத்திக் கொள்ளும் தன்மைக்குமாறிவிடுகிறோம். இதனால் தேவையற்ற இரசாயன மாற்றம் பெரும்பாலும் ஏற்படுவதில்லை. அப்படியே ஏதாவது ஓர் இரசாயன மாற்றம் ஏற்பட்டாலும் அதனோடு போராடாமல் அதுவும் கூட நாம் எதிர்கொள்ளும் சூழ்நிலையின் போது ஏற்படுவது இயற்கையான ஒன்று தான் என்று எடுத்துக்கொள்ளும் மனநிலைக்கு வந்து விடுகிறோம். இப்படி புரிந்து கொண்டு செயல்படும் போது மட்டும் தான் கர்மா பந்தத்திலிருந்து விடுபட முடியும்.

இதனை தொடர்ந்து ஞானப் புரிதல் கொண்ட ஒருவர் கடவுள் தன்மையை எப்படி பார்ப்பார் என்பதைப் பார்ப்போம். நாம் அனைவரும் ஐந்து புலன்கள் வழியாக தெரிந்து கொள்வதை மனம் என்ற 6வது புலன் வழியாக புரிந்து கொள்கிறோம். நமக்கு ஏற்படும் எல்லா நிகழ்வுகளையும் புலன்கள் வழியாக தெரிந்து கொண்டு மனதின் மூலம் அது என்ன என்பதை புரிந்து கொள்ளும் தன்மையில்தான் இருக்கிறோம். மிக உயர்வான கடவுள் தன்மையும் கூட மனதின் மூலம்தான் உணரமுடியும். மனதின் இயக்கத்தினை உணர்ந்து கொண்டு "மனம் என்பதே கணத்திற்கு கணம் தோன்றி மறைய கூடிய ஓர் அம்சம்" என்பதை புரிந்த நிலையில் தான் எல்லாவற்றை ஞானி பார்ப்பார்.

புலன், மனதின் மூலம் மெய்பொருளை அறியமுடியாது. ஏன் எனில் தோன்றி மறையும் மனதின் மூலம் எப்போதும் எங்கும் நீக்கமற நிறைந்திருக்கும் மெய்பொருளை உணரமுடியாது என்ற மனதின் இயலாமையை உணர்ந்து கொண்டு மனதையே புறக்கணிக்கும் தன்மைக்கு வந்துவிடுகிறார். மனம் எப்போது புறக்கணிக்கப்படுகிறதோ அப்போதே எஞ்சி இருப்பது மெய்ப்பொருளின் இயக்கம் மட்டுமே.மனம் முக்கியத்துவம் பெறாமல் தோல்வி அடையும் போது தான் தாமாக நடைபெறுகிற விடுதலையின் இயக்கம் நிகழத்தொடங்குகிறது.

அகத்தில் மனோபந்தங்களிலிருந்து விடுபட்டு சுதந்திரமான பிரவாக இயக்கத்தில் இருப்பது தெரியாமல் இருப்பார். நான் என்ற பிடியிலிருந்து விடுபடுவதை தான் ஞானம் என்று புரிந்திருப்பார். மனோ இயக்கத்தில் நான் தன்மை எந்த குறுக்கிடும் செய்யாமல் எல்லா, எண்ண உணர்வுகளும் பிரவாகமாக ஓடி மறையத் தொடங்கும். கடவுள் தன்மைக்கும் மேலான பிரம்ம நிலையில் இருப்பது தெரியாமல் இருப்பார்.

நடைமுறை வாழ்க்கையை பொருத்தவரையில் ஞானிக்கும், அஞ்ஞானிக்கும் எந்த ஒரு வித்தியாசமும் கிடையாது. நமது புற நலனுக்காக நாமே உருவாக்கிக் கொண்ட சமுதாயத்தில் குடும்பம், உறவுகள், சமுதாய அக்கறை என எல்லா விசயங்களிலும் ஓர் பொறுப்பான அறிவுள்ள நபர் எப்படி நடந்து கொள்வாரோ அந்த தன்மையில் வாழும் தகுதியில் இருப்பார். தன்னை ஞானி என்று எங்கும் காட்டிக் கொள்ள மாட்டார். ஞானம், புரிதல் என்பது எல்லாம் தன்னுடைய அகம் சார்ந்த விசயமாகவே பார்ப்பார். புறத்தில் தனக்கு தேவையான தெரியாதவற்றை தெரிந்து கொள்ளும் நிலையில் வாழ்வார். மனதின் இயக்கத்தையே புரிந்து கொண்ட பிறகு இவர் செய்யும் புறக்காரியங்களில் ஓர் நேர்த்தியும், ஒழுங்கமைப்பும் நாளுக்கு நாள் கூடிக்கொண்டே போகும்.

ஞானி என்றால் எப்போதும் அன்பும், அமைதியுமாக இருப்பவர் என்பது எல்லாம் கிடையாது. அவரைப் பொருத்தவரையில் தனக்கு ஏற்படும் பயம், கோபம், கவலை, காமம், வருத்தம், பொறாமை, பரவசம், அன்பு,அமைதி, மகிழ்ச்சி போன்ற எல்லாவற்றையும் வெறும் தோன்றி மறையும் மனோ உணர்வாக மட்டுமே பார்ப்பார்.

நல்ல உணர்வு, கெட்ட உணர்வு என்ற பாகுபாடு இல்லாமல் எல்லா உணர்வுகளுமே தோன்றி மறையும் தன்மையில் உள்ளது என்ற புரிதலில் இருப்பார். தன்னில் ஏற்படும் எல்லா உணர்வுகளும் இயற்கையானவை என்றும் அவை தோன்றி மறையும் தன்மையில் உள்ளது, அகத்தை பொறுத்தவரையில் நமக்கு ஏற்படும் எல்லா உணர்வுகளும் முடிந்துபோன கனவுகளே என்று வெறும் நிழல் தோற்றமாக பார்க்கும் தன்மையில் இருப்பார்.

தன் மன இயக்கத்தில் முரண்படாது, முடிந்தவரை சமுதாயத்தில் முரண்படாது, எல்லாவற்றையும் ஏற்றுக்கொள்ளும் ஓர் உயர்ந்த தன்மையில், வாழ்வது தெரியாமல் வாழ்ந்து கொண்டு இருப்பார். தான் புரிந்து கொள்ள வேண்டியதை புரிந்து கொண்டு விட்டோம். இனியும் புரிந்து கொள்வதற்கு எதுவும் இல்லை என்று ஆன்மிகத்தையே முடித்துக்கொண்டு தான் சந்திக்கும் யதார்த்த வாழ்க்கையை அறிவுள்ள நபராக வாழும் நிலைக்கு வந்துவிடுவார்.

**"அகத்தே தன்னோடு முரண்படாது புறத்தே புத்தி சாதுர்த்தியமாக நடப்பதே ஞானியின் இலக்கணம்"**

## மாணவ மாணவிகளுக்கான வாழ்வியல் முகாம்

பள்ளி மாணவர்கள் எதிர்கொள்ளும் பிரச்சினைகளில் இருந்து விடுபட்டு அவர்கள் கல்வியில் சிறந்து வாழ்வில் மேம்பாடு அடைவதற்காக அவர்களுக்கான சிறப்பு வாழ்வியல் முகாம் நடைபெறவுள்ளது. இதில் 10, 11 மற்றும் 12 ஆம் வகுப்புக்கு செல்லக்கூடிய மற்றும் 12ம் வகுப்பு முடித்த மாணவ மாணவிகள் மட்டும் கலந்து கொள்ளலாம். இவர்களுடன் ஆசிரியர்களும் கலந்து கொள்ளலாம்.

இடம் : **ஸ்ரீ பகவத் பவன், திருவருட்சோலை, கொடம்பக்காடு, பெரிய கவுண்டாபுரம், சேலம்.**

நாள் : 12.05.2018 சனிக்கிழமை காலை 8.00 மணி முதல் 13.5.2018 ஞாயிறு மதியம் 3.00 மணி வரை (11.5.2018 மாலை ஸ்ரீ பகவத் பவன் வந்து தங்கிக் கொள்ளலாம்.)

மாணவர்களுக்கும் மாணவிகளுக்கும் தனித்தனி தங்கும் வசதி உள்ளன. மாணவ மாணவிகள் பெற்றோர் துணையுடனோ (அ) பாதுகாப்பாளர் துணையுடனோ வரவேண்டும்.

**தங்குமிடம், உணவு அனைத்தும் இலவசம். கட்டணமின்றி நடைபெறுவதால் இதற்கான செலவுகளை எதிர்கொள்ள நன்கொடைகளை வரவேற்கிறோம்.**

50 மாணவ மாணவிகள் மட்டுமே கலந்து கொள்ள இடமிருப்பதால் கலந்து கொள்ள ஆர்வமுள்ளவர்கள் முன்பதிவு செய்வது அவசியம்.

முன்பதிவு செய்வதற்கு கீழ்கண்ட விண்ணப்ப படிவத்தை பூர்த்தி செய்து ஏப்ரல் 20 ம் தேதிக்குள் ஸ்ரீ பகவத் மிஷனுக்கு அனுப்பி வைக்க வேண்டும். ஏப்ரல் 30 ம் தேதிக்குள் அனுமதி உறுதி செய்யப்படும்.

### விண்ணப்பம்

மே மாதம் 12 மற்றும் 13 ம் தேதிகளில் நடைபெறும் மாணவ மாணவிகளுக்கான சிறப்பு வாழ்வியல் முகாமில் கலந்து கொள்ள விரும்புகிறேன்.

மாணவன் / மாணவி பெயர் : ..........................................................

2017-2018 படித்த வகுப்பு : ..........................................................

முழு முகவரி : ..........................................................
..........................................................
..........................................................

உடன் வரும் பெற்றோர் / பாதுகாவலர் பெயர் : ..........................................................

தொலைபேசி : ..........................................................

பாதுகாவலர் எனில் உறவு முறை : ..........................................................

விண்ணப்பம் வந்து சேர வேண்டிய கடைசி நாள் 20.4.2018

கையொப்பம்



# ஆசிரியர் பகுதி

K.S. ஜீவமணி
செல் : 97891 65555

அனைவருக்கும் சகப் பயணியின் வணக்கம்.

அன்பர் ஒருவர் கேள்வி ஒன்றை எழுப்பினார். "இன்ப நாட்டம்தான் அனைத்து பிரச்சினைகளுக்கும் காரணம் என்றால், எப்படி வாழ்வது. இன்பத்தின் மீது உள்ள ஆர்வம்தானே நமது செயலைத் தூண்டுகிறது. இன்ப நாட்டமில்லாமல் வாழ முடியுமா?" எனக் கேட்டார்.

எத்தனையோ ஞானிகள் ஞானத்திற்கு பல விளக்கங்கள் கொடுத்திருந்தாலும், பகவத் ஐயா அவர்கள் நமது மனத்தின் செயல்பாட்டை அகம்-புறம் என பிரித்து புரிதலாக கொடுத்திருப்பதால் ஞானத்தை மிகவும் எளிமையாக்கி விட்டார்.

நாம் எல்லாவற்றையும் மனதை கொண்டுதான் சிந்திக்கிறோம். மனதைக் கொண்டுதான் செயல்படுகிறோம். இன்ப நாட்டமும் மனதில்தான் தோன்றுகிறது. ஆனால் அந்த இன்பநாட்டம் எதைநோக்கி இருக்கிறது என்பதில் தான் பிரச்சினை இருக்கிறது.

நமது இன்ப நாட்டம் அகத்தை நோக்கியா? அல்லது புறத்தை நோக்கியா?

நாம் பொருளாதாரத்தில் உயர வேண்டும், சிறந்த வாழ்க்கை வாழ வேண்டும், சமுதாயத்திற்கு நற்செயல்களை செய்ய வேண்டும் என்பதும் ஓர் இன்ப நாட்டம் தானே. இது புறத்தை நோக்கிய இன்ப நாட்டம். நாம் வாழ்வில் உயர்வதற்கு நமது செயலே மிகவும் முக்கியமானது. நமது செயலுக்கு தூண்டுகோலாக அமைவது நமது விருப்பங்களே. புறத்தை நோக்கிய இன்ப நாட்டம் நமக்கு பல இருக்கலாம். அவற்றில் எது சரியானது எது தேவையானது என பகுத்தறிந்து அவற்றுக்கு முக்கியத்துவம் கொடுத்து அதற்கான முயற்சியிலும் செயலிலும் இறங்க வேண்டும். இப்படி செயல்படும் போது புறத்தை நோக்கிய இன்ப நாட்டம் வாழ்க்கையில் வெற்றி பெற தூண்டுகோலாக அமையும்.

அகத்தை நோக்கிய இன்ப நாட்டம் என்றால் என்ன? நம் மனதில் தோன்றும் இன்பத் துன்ப உணர்வுகளின் மீது காட்டும் இன்ப நாட்டமே அகத்தை நோக்கிய இன்ப நாட்டம். இதுவே அனைத்துப் பிரச்சினைகளுக்கும் மூலக் காரணம். நமக்கு தோன்றும் எண்ணங்களிலும் உணர்வுகளிலும் "இது சிறந்தது, நல்லது" என்றும் "இது மோசமானது, வரக்கூடாதது" என்றும் அக உணர்வுகளை பகுத்தறியும் அறிவே அனைத்துப் பிரச்சினைகளுக்கும் மூலக் காரணம்.

அப்படியென்றால் அகத்தில் இன்ப நாட்டம் இல்லாமல் இருக்க வேண்டுமா? இன்ப நாட்டம் இல்லாமல் இருக்கவேண்டும் என்பதும் ஓர் இன்ப நாட்டமே. பிறகு என்னதான் செய்வது? அகம் எப்படி வேண்டுமானாலும் இருக்கட்டும் என அதற்கு முழு சுதந்திரம் வழங்குவதே சரியானது. மனதிற்கு முழு சுதந்திரம் வழங்கும்போது மனதும் அதன் பிடியில் இருந்து நம்மை விடுவிக்கின்றது. உண்மையில் மனதிலிருந்து மனம் விடுதலை அடைகிறது, மனம் சுய முரண்பாடற்று சுதந்திரமாக இயங்குகிறது. சுதந்திரமாக இயங்கும் மனதில் எந்த துன்பமும் நீடிப்பதில்லை, எந்த இன்பமும் நீடிப்பதில்லை.

இதுவே இயற்கையான நிலை - ஆரோக்கியமான மனம்.

இப்படி பல கோணங்களிலும் மனதின் இயக்க உண்மையைப் புரிந்து கொள்வதே ஞானம்.

ஞான முகாம்களில் ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் ஞானப் புரிதலை - மனதின் இயக்க உண்மையை அறிவியல் ரீதியாக வழங்கி வருவதால் கலந்துகொள்ளும் அனைவரும் பயனடைந்து வருகின்றனர்.

அந்த வகையில் மார்ச் 10 & 11 ஆம் தேதிகளில் சென்னையில் இரண்டுநாள் ஞான முகாம் சிறப்பாக நடைபெற்றது. இதில் அக்கு ஹீலர் பலர் கலந்து கொண்டு பயனடைந்தனர். இதனை சென்னை ஸ்ரீபகவத் மிஷன் மைய அன்பர்கள் ஏற்பாடு செய்திருந்தனர். திரு. **இரவிச்சந்திரன்** ஐயா அவர்களுடன் இணைந்து சிறப்பாக செயலாற்றிய அனைவருக்கும் பாராட்டுக்களையும் நன்றியையும் தெரிவித்துக்கொள்கிறோம்.

இதனை தொடர்ந்து மார்ச் 18 ஆம் தேதி கரூர் TNPL லில் ஒரு நாள் ஞான முகாம் சிறப்பாக நடைபெற்றது. இந்த ஞான முகாமை TNPL நிர்வாகமும் பரமத்திவேலூர் ஸ்ரீ பகவத் மிஷன் மையமும் ஏற்பாடு செய்திருந்தது. இதற்கு வித்தகராக இருந்து செயல்பட்ட திரு. **சிவகுரு** அவர்களுக்கும் ஸ்ரீ பகவத் மிஷன் அன்பர்கள் அனைவருக்கும் பாராட்டுகளையும் நன்றியையும் தெரிவித்துக் கொள்கிறோம்.

மேலும் 25.3.2018 ஞாயிறு அன்று திருச்சி நகைச்சுவை மன்றத்தில் மகளிர் தின சிறப்பு பட்டிமன்றம் நடைபெற்றது. இதில் பல உளவியல் நிபுணர்களும் மருத்துவர்களும் கலந்து கொண்டனர். இதில் கலந்து கொண்ட அனைவருக்கும் திருச்சி ஸ்ரீ பகவத் மிஷன் மையம் சார்பாக நமது பகவத் பாதை மாத இதழ்களை திரு. **சரண்குமார்** அவர்கள் வழங்கினார். ஐயாவின் கருத்துக்களை அனைவருக்கும் கொண்டு செல்வதில் ஆர்வமாக செயல்படும் அவர்களுக்கு பாராட்டுகளையும் நன்றியையும் தெரிவித்துக் கொள்கிறோம்.

வருகின்ற ஏப்ரல் மாதம் 28 ஆம் தேதிமுதல் 30 தேதிவரை சேலம் ஏற்காட்டில் 3 நாள் ஞானமுகாம் நடைபெறவுள்ளது. இந்த ஞான முகாமில் **ஸ்ரீ பகவத் ஐயாவின் வாழ்க்கை வரலாற்றை எனது பயணம்** என்ற நூலாக வெளியிட உள்ளோம் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக்கொள்கிறோம். அனைவரும் கலந்து கொண்டு பயனடைய அழைக்கிறோம். அனைவரும் வருக! ஞானத் தெளிவு பெறுக!!

# கவலைகள் அனைத்திற்கும் தீர்வு - புதிய பதிப்பு




அனைத்து அன்பு உள்ளங்களுக்கும் எங்கள் அன்பான வணக்கம்.

ஸ்ரீ பகவத் ஐயாவின் நூல்களில் பிரதான நூலான **கவலைகள் அனைத்திற்கும் தீர்வு** என்ற நமது நூல் உங்கள் அனைவரது ஆதரவுடன் பரிசளிப்பு விலையாக ரூ.**50**/- க்கு ஆங்கிலத்திலும், தமிழிலும் வெளியிட்டு வருகிறோம். இதற்கு 24 அன்பு உள்ளத்தினர் தலா ரூ. **10,000/-** வழங்கியிருந்தனர்.

அதன் காரணமாக பல்வேறு நபர்களுக்கு நமது கருத்துகளை வழங்கி உதவ முடிந்தது.

நாம் தமிழில் அச்சிட்ட இந்த நூல்கள் மட்டும் தீர்ந்து விட்ட நிலையில், இந்த நூலை நாம் மீண்டும் அச்சிட வேண்டியவர்களாக இருக்கிறோம்.

இதற்கு ரூ. **10,000/-** வழங்கும் **25** அன்பு உள்ளத்தினர் மட்டும் தேவைப்படுகிறார்கள்.

**இத்தொண்டில் பங்கேற்ற அன்பு உள்ளம் கொண்ட திரு. சங்கரநாராயணன், கும்பகோணம் அவர்களுக்கு உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம்.**

இன்னும் 24 அன்பர்கள் தேவைப்படுகிறார்கள்.

இந்தப் பரிசளிப்பில் பங்கேற்க விரும்பும் அன்பு உள்ளங்களை, எங்களோடு தொடர்பு கொள்ள வேண்டுகிறோம்.

இவண், **ஸ்ரீ பகவத் மிஷன்,** சேலம். செல் : 99942 05880, 97891 65555

# நன்றி



அனைவருக்கும் உளமார்ந்த நன்றிகள்.

நமது ஸ்ரீபகவத் மிஷனின் குடும்ப உறுப்பினர் திரு. சேகர், திருப்பூர் அவர்கள் ஐயா அவர்களின் கருத்துக்களை அனைவருக்கும் கொண்டு சேர்ப்பதில் ஆர்வத்துடன் செயல்பட்டவர். திருப்பூரில் பல சத்சங்கங்களை ஏற்பாடு செய்தவர். ஸ்ரீ பகவத் மிஷனுக்காக இரண்டு ஆண்டுகள் காலாண்டரை இலவசமாக அச்சடித்து வழங்கியவர். இவர் கடந்த ஜனவரி 2ம் தேதி மாரடைப்பால் தன் இளம் வயதிலேயே காலமானார். தற்போது இவரது மனைவி மற்றும் இரு குழந்தைகளும் பொருளாதாரத்தில் மிகவும் சிரமமான நிலையில் வாழ்ந்து வந்த சூழ்நிலையில் கணவர் செய்து வந்த ரெடிமேட் கார்மெண்ட் தொழிலை மீண்டும் எடுத்து செய்வதற்கு இவர்களுக்கும் ரூபாய் ஒரு லட்சத்து இருபத்தி ஐந்தாயிரம் முதலீடு தேவையாக உள்ளது என அறிவித்திருந்தோம். இவர்களது நிலையை உணர்ந்து நாம் கேட்டிருந்த தொகையைவிட அன்பர்கள் அதிகமாகவே வழங்கியதால் அவர்களின் தொழிலுக்கான முதலீட்டோடு தொழில் செய்யும் வாடகை இடத்திற்கான அட்வான்ஸ் தொகையும் கைசெலவுக்கு தேவையான தொகையையும் வழங்கியுள்ளோம். இது அவர்களின் பொருளாதார சூழ்நிலையின் சிரமத்தை குறைக்க பேருதவியாக இருக்கிறது. மேலும் இவர்களின் இரு குழந்தைகளின் கல்வி கட்டணத்தையும் தேவைப்படும் சூழ்நிலையில் வழங்குவதாக சில அன்பர்கள் உறுதி அளித்துள்ளார்கள். நமது வேண்டுகோளை ஏற்று இவர்களின் குடும்பத்திற்கு **ஸ்ரீ பகவத் ஐயாவுடன்** இணைந்து உதவிய அன்பு உள்ளத்தினர் :

திரு. **இராஜகோபால்**, பரமத்தி வேலூர், திரு. **முத்துச்செல்வன்**, நாகப்பட்டணம், திரு. **சிவகுரு**, கரூர், திரு. **சரவணன்**, சேலம், திரு. **ஜீவமணி**, சேலம், திரு. அக்கு ஹீலர் **அ. உமர்பாரூக்**, திரு. **சதானந்தம்**, திருச்செங்கோடு, திரு. **இரவிச்சந்திரன்**, வெஸ்ட் மாம்பலம், திரு. **முரளி கண்ணன்**, கோவை, திருமதி. **ஹேமா**, USA, திரு. **M. சுப்பையா**, புதுக்கோட்டை, திருமதி **S. பத்மாவதி, S. தன்யா, S. முத்து வீரன் சர்வேஷ்**, திரு. **விபுலானந்தன்**, கோவை, திரு. **கணேஷ்**, கோவை, திரு. **ஜெயராம்**, கனடா, திரு. **கார்த்திகேயன்**, சிங்கப்பூர், திரு. **விஷ்ணுகுமார்**, பெங்களூர், திரு. **வைரமுத்து**, மதுரை, திரு. **உமாமகேஸ்வரி**, தேனி, திரு. **குணாலன்**, கோவை, திரு. **பாலமுருகன்**, USA, திரு. **சேகர்**, துபாய், திரு. **G. வெங்கடேஷன்**, மதுரை, திரு. **வேலுச்சாமி**, கோவை, திரு. **இராகவன்**, காலகஸ்தி, திரு. அக்கு ஹீலர் **குமார்**, காட்பாடி, திரு. அக்கு ஹீலர் **டார்வின் ராஜ்**, சென்னை, **Ms. Dr. மகேஸ்வரி**, பாண்டிச்சேரி, திரு. **செந்தில் ஜெயபாலன்**, பெங்களூர், திருமதி. **Dr. செந்தமிழ் செல்வி**, கோவை, திரு. **இரவிசங்கர்**, சேலம், திரு. **பாபுலால்**, பெங்களூர், திரு. **ஆனந்த்**, சென்னை, திரு. **D. சந்திரசேகரன்**, சென்னை, திரு. **B. ஸ்ரீனிவாசன்**, சென்னை, திரு. **வீரப்பன்**, திருநெல்வேலி, திரு. **சுரேந்திரன்**, சென்னை, திருமதி **முத்துலட்சுமி சரவணன்**, சென்னை, திரு. **இராஜேஸ்**, ஆஸ்திரேலியா, **Ms. தேவி**, மலேசியா, திரு. **சந்திரசேகரன்**, பெங்களூர், திரு. **செந்தில்குமார்**, திண்டுக்கல், திரு. **கோவி இரவி**, கரூர், திரு. **K.S. பாலசந்திரன்**, சென்னை, திருமதி. **Dr. விஜயலட்சுமி**, திரு. **அக்கு ஹீலர் இராதாகிருஷ்ணன்**, சென்னை, திரு. **கணேஷ்**, சென்னை, திரு. **சுரேஷ்குமார்**, திருப்பூர், திரு. **மனோகரன்**, சென்னை, திரு. **எழில் அரசன்**, கடலூர், திரு. **சரவணன்**, புரசைவாக்கம்.

பேருதவி செய்த இவர்கள் அனைவருக்கும் உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம்,






சென்னையில் நடைபெற்ற ஞான முகாம்



சென்னை கலந்துரையாடல் கூட்டத்தில்



சென்னையில் நடைபெற்ற கலந்தாய்வு கூட்டத்தில் ஐயாவுடன் சென்னை மையத் தலைவர் இரவிச்சந்திரன் மற்றும் திரு. கணேஷ்



கரூர் TNPL ல் நடைபெற்ற ஞான முகாமில் ஐயாவுடன் திரு. சிவகுரு



சென்னை ஞானமுகாமில் திரு. சுகுமார் ஸ்ரீனிவாசன் அவர்களுடன்



சென்னை கலந்துரையாடல் கூட்டத்தில் கலந்து கொண்ட திரு. சம்பந்த முதலியார்-திருமதி வடிவம்மாள் தம்பதியினர்




தமிழ்நாடு நீர் வளத்துறையில் நேர்மையான அதிகாரியாக பணிபுரிந்து ஓய்வு பெற்றவர். ஐயாவின் திருச்சி வருகையின்பொது உதவிகரமாக இருந்தவர் திரு. மனுராஜ் அவர்களுக்கு திருச்சி ஸ்ரீபகவத் மிஷன் சார்பில் திரு. சரண்குமார் அவர்கள் ஐயாவின் நூல் வழங்கினார்.

# கோடையில் இயற்கை சூழல் மிகுந்த ஏற்காடு மலைப் பிரதேசத்தில் 3 நாள்

# சிறப்பு ஞானமுகாம்

வழங்குபவர் : **ஸ்ரீ பகவத் ஐயா** அவர்கள்

இடம் : House of Peace (Glass House) அமைதி இல்லம், ஏற்காடு.
நாள் : 28-4-2018 சனிக்கிழமை மதியம் 1 மணி முதல்
30-4-2018 திங்கள் மாலை 3.00 மணி வரை

**தலைப்புகள் :**

1. ஞானப்புரிதல்
2. அகம்-புறம்
3. நான் யார்?
4. நினைவும் சிந்தித்தலும்
5. மனோலயம் - மனோ நாசம்
6. கர்மவினை
7. தெளிவில் உறுதி



- இது கோடை காலத்திற்கு ஏற்ற சுற்றுலா தலமாக அமைந்திருப்பதால் குடும்பத்துடன் பங்கு பெறலாம்.
- ஆண்களுக்கும், பெண்களுக்கும் தங்குவதற்கான தனித்தனி இடவசதி உள்ளது. ஒவ்வொருவருக்கும் தனித்தனி படுக்கை வசதி உள்ளது. தனி அறைகள் 10 மட்டும் உள்ளதால் குடும்பத்துடன் வருபவர்களுக்கு மட்டும் தனி அறை கொடுக்கப்படும்.
- உணவு மற்றும் தங்கும் இடவசதிக்கான செலவு பகிர்வு தலா ஒருவருக்கு ரூ. 3000/- மட்டுமே.
- 90 நபர்கள் மட்டுமே தங்க இடமிருப்பதால் பங்கேற்க விரும்புபவர்கள் ஏப்ரல்15ம் தேதிக்குள் முன்பதிவு செய்திட வேண்டுகிறோம்.

**முன்பதிவு செய்யும் வழிகள் :**

**M.O, D.D. (or) Cheque :** வரைவோலை அனுப்புபவர்கள் : A/c. Sri Bagavath Mission என்ற பெயரில் சேலத்தில் செல்லத்தக்கதாக அனுப்புமாறு கேட்டுக்கொள்கிறோம்.

**Direct Payment :** நேரடியாக வங்கியில் செலுத்துபவர்கள் : Sri Bagavath Mission, HDFC A/c No. : 15907620000075 NEFT IFSC : HDFC 0001590 என்ற வங்கிக் கணக்கில் செலுத்தி தெரியப்படுத்தவும்.

**Online Payment :** Credit Card or Debit Card மூலம் www.sribagavathmission.org என்ற வெப்சைட்டிலும் முன்பதிவு செய்யலாம்.

**ஸ்ரீ பகவத் மிஷன்**

31, இராமலிங்கசாமி தெரு, அம்மாப்பேட்டை, சேலம்-3. கைப்பேசி : **9994205880, 97891 65555**




ஸ்ரீபகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்களுக்கு வணக்கம்.

ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் மனதில் உறுதி வேண்டாம் என்ற புதிய நூலை மல்லிகை பிரசுரம் வெளியிட்டுள்ளது. விலை ரூபாய் 100/- மட்டும். இந்நூலில் மனதின் சூட்சுமத்தை எளிய கதைகளின் மூலம் பாமரமக்களும் புரிந்து கொள்ளும் வண்ணம் விளக்கி ஞானத்தெளிவை கொடுத்திருக்கிறார் ஸ்ரீபகவத் ஐயா அவர்கள். இந்நூல் நமது ஸ்ரீ பகவத் மிஷன் மையங்களில் கிடைக்கும். தாங்களும் வாங்கி பயன்பெறுவதோடு நண்பர்களுக்கும் அறிமுகப்படுத்துமாறு அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

ஸ்ரீ பகவத் மிஷன், சேலம்
செல் : 9994205880, 97891 65555

<u>மேலும் கிடைக்கும் இடங்கள்</u>

1. ஸ்ரீபகவத் மிஷன், சேலம், செல் : 9994205880, 97891 65555
2. ஸ்ரீ பகவத் மிஷன், வெஸ்ட் மாம்பலம், சென்னை. செல் : 94444 02986
3. திரு. சரண்குமார், ஜென்சங் அக நூலகம், திருச்சி. செல் : 98940 12639, 04312701239
4. திரு. ஜெயகோபால். வாழ்க வளமுடன் புத்தக மையம், திண்டுக்கல். செல் : 91503 02904

# "மூச்சை"

## இழு – நிறுத்து – விடு

## ஜென் கதை



ஞானமும் ஆன்ம விடுதலையும் பெறவேண்டும் என்று தீவிர பயிற்சி முயற்சியில் இருந்தான் ஒரு சாதகன். ஆனால் ஞானம் கிடைத்தபாடு இல்லை.

ஜென் தத்துவத்தை தெரிந்து கொண்டால் வெற்றிபெறலாம் என்று ஒரு ஜென் மடாலயத்திற்கு சென்று ஜென் குருவை சந்தித்து தனக்கு கற்றுத்தரும்படி மன்றாடினான்.

குரு அவனை சில காலம் மடாலயத்தில் தங்கியிருந்து தெரிந்து கொள்ளும் படி கூறினார்.

குரு வருபவர்களிடம் எல்லாம் ஜென் தத்துவத்தை கூறுவதை உன்னிப்பாக கவனித்து வந்தான் சாதகன். ஆனாலும் அவனுக்கு ஒன்றும் புரியவில்லை. இப்படியே ஒரு மாதம் கழிந்தது. தான் வந்த வேலை நிறைவடையவில்லை என்று வருந்தினான் சாதகன்.

குருவிடம், "நீங்கள் ஜென் தத்துவத்தைப் பற்றி கூறும் வார்த்தைகள் அர்த்தம் ஒன்றுமே புரியவில்லை. மேலும் நீங்கள் அடிக்கடி ஜென்னில் வாழ்வதும் விடுதலையில் வாழ்வதும் ஒன்றுதான் என்று கூறுகிறீர்கள். அப்படியென்றால் ஜென்-ல் வாழ்வதற்கான பயிற்சியாவது எனக்கு கொடுக்கலாமே" என்று கேட்டான்.

அவனின் ஆற்றாமையை அமைதியாக கேட்டுக்கொண்டிருந்த குரு, "நீ கூறுவதும் சரிதான் என்று கூறி அவனை ஒரு இடத்தில் அமைதியாக அமர வைத்தார். இப்போது நான் சொல்வதை கேட்டு நீ அப்படியே செய்ய வேண்டும் புரிகிறதா" என்றார்.

இந்த வாய்ப்பைத் தவறவிடக்கூடாது என்று குரு கூறுவதை சாதகன் மிகவும் கூர்மையான கவனத்துடன் அப்படியே உள்வாங்கிக் கொண்டிருந்தான்.

குரு அவனிடம், "இருபது வினாடி சுவாசத்தை இழு, இருபது வினாடி சுவாசத்தை உள்ளே நிறுத்து, இருபது வினாடி சுவாசத்தை மெதுவாக வெளியே விடு" என்றார்.

சாதகனும் கடிகாரத்தை பார்த்துப் பார்த்து மிகவும் கவனத்துடன் சுவாசத்தை உள்ளே இழுத்து, நிறுத்தி, வெளியே விட்டான்.

குரு அவனிடம் இப்படியே இந்தப் பயிற்சியை 30 நிமிடம் செய்யச் சொன்னார்.

சாதகன் தொடர்ந்து 30 நிமிடம் சுவாசத்தை கவனத்துடன் இழுத்து நிறுத்தி வெளியே விட்டதால் மிகவும் களைத்துப் போய்விட்டான்.

குரு, அவனிடம் "வேலை முடிந்துவிட்டது. இனி நீ எழுந்து கொள்ளலாம், ஒரு மணிநேரம் கழித்து என்னை வந்து பார்" என்றார்.

இளைஞன் ஒரே இடத்தில் அரை மணிநேரம் உட்கார்ந்து கவனத்துடன் சுவாசத்தை உள்ளே இழுத்து, நிறுத்தி, வெளியே விட்டதால் மிகவும் களைத்து போயிருந்தான். அதனால் கொஞ்சம் உடலைத் தளர்த்திக் கொள்வதற்காக குடிலை சுற்றி உலாத்திக் கொண்டிருந்தான்.

ஒரு மணிநேரம் கழித்து குருவை சந்தித்து "இப்போது நான் என்ன செய்ய வேண்டும்?" என்று கேட்டான் சாதகன்.

"கடந்த ஒரு மணிநேரம் நீ சுவாசத்தை உள்ளே இழுத்து, நிறுத்தி, வெளியே விட்டதை கவனித்தாயா?" என்றார் குரு.

"இல்லை" என்றான் அவன்.

கடந்த ஒரு மணிநேரத்தில் நடந்த சுவாசத்தில் உன் முயற்சி என்பது இருந்ததா? இயல்பான சுவாசத்திற்கு உன்னுடைய முயற்சி தேவையில்லை தானே "என்றார் குரு.

"ஆமாம் என்னுடைய இயல்பான சுவாசத்திற்கு என்னுடைய முயற்சி தேவையில்லை" என்றான்.

"நீ ஓர் இடத்தில் அமர்ந்து 30 நிமிடம் சுவாசத்தை உள்ளே இழுத்து, நிறுத்தி வெளியே விட்டுக்கொண்டிருந்தாயே அப்போது அதில் உன் முயற்சி இருந்ததா?" என்று கேட்டார் குரு.

"அந்த 30 நிமிடம் என் முயற்சியால் சுவாசத்தை நானாக இழுத்து நிறுத்தி விட்டுக்கொண்டிருந்தேன். அதனால் மிகவும் களைத்துப் போய்விட்டேன். அதன் பிறகு கடந்த ஒரு மணிநேரம் என் முயற்சி ஏதுமின்றி இயல்பாக சுவாசம்நடைபெற்றுக்கொண்டிருக்கிறது. இப்போது களைப்பு நீங்கி தளர்வாகிவிட்டேன்" என்றான் சாதகன்.

"உன்னுடைய முயற்சியே இல்லாமல் இயல்பாய் சுவாசம் நடைபெறுவது தான் ஜென்-ல் வாழ்வது ஆகும். நீ முயற்சி செய்யும் தோறும் இயல்பான இயக்கம் மாறிவிடுகிறது. நீ உன்னுடைய முயற்சியை கைவிடும் தோறும் மீண்டும் இயல்பான சுவாசம்-இயக்கம் எப்போதும் போல் நடைபெறுகிறது. இதுதான் ஜென்" என்றார் இதே போல் வாழ்க்கையில் உன்னுடைய மன இயக்கமும் இப்படி முயற்சிகள் எதுவும் இன்றி இயல்பாக நடைபெறுவதை புரிந்து கொண்டு அதில் உன்னுடைய குறுக்கீடு எதுவுமின்றி இயல்பாக இருப்பதே ஜென் -ல் வாழ்வது" என்றார் குரு.

சாதகனின் மனதில் குரு கூறிய ஜென் தத்துவங்களின் உண்மை பொருள் எல்லாம் தானாக புரிய தொடங்கியது. "ஜென் என்பது நம்முள் எப்போதும் இருப்பது, அதை நாம் ஒரு போதும் அடைய முடியாது. அடைய முயற்சி செய்யும் தோறும் நாம் அதிலிருந்து தவறிவிடுகிறோம், நாம் எப்போதும் இருப்பதே ஜென்னில் தான், இயல்பாய் இருப்பது என்பதும் இருப்பது தெரியாமல் இருப்பது என்பதும் ஜென்-ல் வாழ்வதையே குறிக்கிறது என்பதை புரிந்து கொண்டான். தானும் இதுவரை ஜென்னில் இருந்து கொண்டு தான் ஜென்னை தேடிக் கொண்டு இருந்திருக்கிறேன். தேடுதலை விட்டவுடன் நான் இருப்பதே ஜென்னில் தான் என்பதை விளங்கிக்கொண்டு தானும் ஒரு வாழும் ஜென்னாகவே மாறிப்போனான்.

இவ்வளவு அழகாக ஜென்னை புரிய வைத்த குருவின் பாதங்களை வணங்கி, சரணகதியாக விழுந்தான் சாதகன்.

Registration Number of the Registered News Paper TNTAM/2014/57698
Postel Registration Number : TN/WR/SL(E)/22/2018-2020 Posted at Salem HOP 636001. On 10th of every month.

Published by Shri. V.A.P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu. India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003. Editor : Shri. K.S. Jeevamani Cell : 97891 65555